# சுவாமி பட்டினத்தார்

ஆசிரியர்:

ஸ்ரீ ஜி. டி. கோபாலகிருஷ்ண நாயுடு




திருமலை திருப்பதி தேவஸ்தான செயலாட்சித் தலைவர்,
திரு. எஸ். லக்ஷ்மிநாராயணா, ஐ. ஏ. எஸ்.,
அவர்களால் வெளியிடப்பட்டது.

1987

# சுவாமி பட்டினத்தார்

## பகுதி 1

### திருவொற்றியூரின் உயர்வு

'திரு ஒற்றியூர்க்கு வா', என்பது திரு விடைமருதூர் மகாலிங்கர் கட்டளை. ஆடையின்றி நடந்த பட்டினத்தார் சிதம்பரம், சீகாழி முதலிய சிறந்த தலங்களைச் சேவித்தார்.

செல்லும் வழியில் பசியோ பெரிதும் பாதித்தது. எதிர் வந்த அம்மையார் ஒருவர் இவர் கையில் அமுதை உருட்டிவைத்தார். பசி பறந்தது.

"தாயே! நீ யார் அம்மா! உரிய சமயத்தில் வந்து உதவினையே! காமாட்சி அம்மன் போல் வந்தாய்!"

'காமாட்சி போல் இருக்கிறாயே என்றாயே; காமாட்சி தானடா அப்பா நான் காமாட்சியே தான்; நீலாட்சியும் கூட', என்ற பதில் வந்தது.

கை குவித்தார், பட்டினத்தார், 'அம்மா! அம்மா!! அம்மா!!!' என்று அலறினார். நீலாட்சி பளபளத்த ஒளி யுடன் மறைந்தாள்.

புறப்பட்டார், பல தலங்களை வணங்கினார். சிவனார் கட்டளைப்படி திருவொற்றியூரை அடைந்தார். ஒற்றி

யூரானை, தியாகேசனைச் சித்தம் கனியச் சேவித்தார். அவரை வர்ணித்தார்.

" கண்டம் கரியதாம் கண்மூன் றுடையதாம்
அண்டத்தைப் போல அழகியதாம்—தொண்டர்
உடலுருகத் தித்திக்கும் ஓங்குபுகழ் ஒற்றிக்
கடலருகே நிற்கும் கரும்பு !"

என்று பாடிப் பரவசம் அடைந்தார்.

நீலகண்டத்தைக் காண்கிறார்; முக்கண்ணன் முகத்தை முழுமையாக அநுபவிக்கிறார். உலகத்தைப்போல் அழகு டைத்தாம்; பக்தர்கள் மனம் தித்தித்து உருகுகின்றதாம். புகழ்பெற்ற ஒற்றியூரான் கடலருகே நிற்கின்றவர் கரும் பினும் இனியவனாம்.

நாட்கள் சென்றன. உணர்ச்சிமேலிடப் பாடிக்கொண் டேயிருக்கிறார். மீண்டும் மீண்டும் தன்னைத் தானே ஒற்றி யூரானிடம் ஒன்றித்துக்கொள்ள முயலுகின்றார்.

'திருவொற்றியூரா தியகோசா! இனித் தனித்திரேன்; நீயும் நானுமாம் ஏகபோகம் ஆய, பிரபோ! பிரபோ! அந்நாள் அணுகுவதை அறிகிறேன்'.

அதே சமயத்தில், மாடு மேய்க்கும் சிறுவர்கள் அங்குக் காணப்பட்டனர். ஓடினார்; அவர்களை அணுகினார்.

'தம்பி! உங்கள் விளையாட்டில் என்னையும் சேர்த்துக் கொள்ளுங்களடா!'

'அட! எவ்வள பெரிய ஆளு, நீ! என்னைய்யா எங்க ளோடவா விளையாடப் போகிறீர்!'

'தம்பி! சிறுசு பெரிசு என்ற வித்தியாசம் இல்லையடா! ஆண்டவனே, கூத்து ஆடுகின்றான்; அவனுட, அகிலமும் ஆடுதடா!'

30/4

என்னையா சொல்றே! எது ஐயா, ஆடுது?'

'ஆடுவதுமட்டும் அல்ல; பாடவும் பாடுதடா, அப்பா!'

'என்னது? ஆடுதாம், பாடுதாம்; எது ஐயா, அது?

ஆடும்; பாடும்; அது எது தெரியுமா? அது தானடா அது!'

'அது அது என்னு' எது அது? என்னுசாமி சொல்றே நீ!

அது தான் சொல்றேன், கேள்! என்று சொல்லிக் கொண்டே பாடுகிறுர், அடிகள்; பாடிக்கொண்டே ஆடு கிறுர்; ''மண்ணுசை பட்டேனே, மண்ணுண்டு போட்டதடா! பொன்னுசை பெண்ணுசை, போகேனே என்குதே! கன்னி வன நாதா! கன்னிவன நாதா!'

மூல மறியேன் முடியும் முடிவறியேன்
ஞாலத்துள் பட்டதுயர் நாட நடக்குதடா!

சிறுவர்கள் அதிசயத்தனர்; அடிகளுடன் தாமும் பாடி யாடினர் பாலர்கள்.

அடிகள் மண்ணை வாரினுர்; மண் சர்க்கரையாகத் திகழ்ந்தது. 'பிடியுங்கடா', என்று பிள்ளைகட்குக் கொடுத் தார். பாலர்கள் திக்பிரமைகொண்டனர். சர்க்கரையை மீண்டும் மீண்டும் வேண்டினர், முனிவரைத் தொடர்ந்தனர். பலதடம் கடல் மணலை அள்ளி அள்ளி, கடலைச்சுண்டல், கற்கண்டு என்று பாலர்கள் கைகளில் கொடுத்தார், அடிகளார்,

பிள்ளைகள் வியந்தனர்; அடிகளை மொய்த்தனர். அவர் ஆட்டியப்படியெல்லாம் ஆடினர். ஒரு குழி பறிக்கச் சொன்னுர் சிவனடியார்; பறித்தார்கள்.

குழியில் இறங்கினுர், அடிகளார். மண்ணுல் என்னே மூடிவிடுங்கள்! கற்கண்டு ரொம்பக் கொடுக்கிறேன், என்ருர். சிறுவர்கள் சிரித்தபடியே அப்படியே செய்தனர், சிறிது பொறுத்துத் திறந்தனர், எங்கே அடிகள்? 'ஐயோ சாமி! எங்கே போயிட்டே' என்று கூவினர்.

'இதோ! இதோ!' என்று ஒரு குரல் எழுந்தது. தூரத்திலிருந்து வருகிருர், அடிகளார் சிரிப்புடன்.

'அடடே! நம்ப ஸாமி கெட்டிக்காரருடா!' என்று கைகொட்டி ஆடுகின்றனர், பாடுகின்றனர், பாலர்கள்.

ஆடலற்புதம்! இப்படிப் பல நேரம் நடந்தது.

இறுதியில் ஒருகுழியில் இறங்கினுர், அடிகளார். வெகு நேரமாக வரவில்லே, சாலேத் திறந்தனர், சிறுவர்கள். அடிகள் இலிங்க உருவாக இருந்ததைக் கண்டார்கள். அதிலிருந்து 'சதாசிவோம், சிதா திவோம்: சதாசிவோம்', என்னும் நாதம் எழுந்தது.

சிறுவர்கள் ஓடினர்; அச்செய்தியை ஊரார்க்கு அறிவித்தனர், ஊரே திரண்டது; உண்மை யுணர்ந்தது; புளகிதம் எய்தியது.

பட்டினத்தார் திருவொற்றியூரில் தியாகேசனே வழிபட்டு, இலிங்கமாகக் காட்சியளிக்கிருர், இன்றும் என்றும்.

பட்டினத்தடிகள், இப்பிறப்பில் ஏராளமான செல்வத்தை அநுபவித்தார், முதல்வனுடைய கருணேயால். கல்வியும் ஞானமும் கனக்கச் செய்தான், கடவுள். இறைவனே அடிகளுக்கு மகனுக உருக்கொண்டு சிவனடியார் பத்திப் புகவைத்து, அவரைச் சிவத்தில் கொண்டு, துறவில்

அமைத்தார். அவர் குழியில் இறங்குமுன் இசைத்த செய்யுளை இங்குச் செவ்வனே செவி சாய்த்துக் கேட்போம்.

“ ஒன்றென் றிருதெய்வ முன்டென் றிருவுயர் செல்வமெல்லாம்
அன்றென் றிருபசித் தோர்முகம் பார் நல்லற முநட்பும்
நன்றென் றிருநடு நீங்காம லேநமக் கிட்டபடி
என்றென் றிருமன மேயுனக் கேயுப தேசமிதே”.

பட்டினத்தார் வாழ்க்கையில் நாம் அறியக் கிடப்பன பல. அவ்வாழ்க்கையைப் படித்துப் பரவசவடைவோம்.

---

# பகுதி 2

## காவிரிப்பூம்பட்டினம்

வளமிக்க நதியான காவேரி கடலில் வந்து கலக்கிறது. சோலைகளிலுள்ள மலர்கள் எங்கும் மணம் கமழ்கச் செய்கின்றன. இங்குதான் காவிரிப்பூம்பட்டினம் உள்ளது.

இப்பட்டினத்தில் ஒரு மாளிகை. சுவர் எல்லாம் பொன் தகடு. தகட்டில் நவரத்தினங்களைப் பதித்திருக்கிறார் கள். பகலெல்லாம் ஒரே ஜோதி மயம்; சந்திரன் பிரகாசிக் கும் இரவிலோ, ஒரே தேஜோமயம்.

காவிரிப்பூம்பட்டினத்தில் பயன் தரும் செல்வம் அதிகம் படைத்தவர், திரு வெண்காடர் ஒருவரே. அதனால் அவரைப் பட்டினத்தார் என்று ஊரார் அழைக்கிறார்கள்: அவர் ஒரு பெரிய இரத்தின வியாபாரி. பல கப்பல்கள்

அவருக்குச் சொந்தம். பல தீவுகளில், அவருடைய வாணிபம் அமோகமாக நடை பெறுகிறது.

தாய் பெயர் ஞானகலாம்பிகை. தந்தை பெயர் சிவ நேசர். பட்டினத்தாருடைய வாழ்க்கைத் துணைவி அழகு மிகுந்தவள்; சிவகலை எனப் போற்றப்படுபவள். அறிவிற் சிறந்த குணநலம் சிறந்த கோதையே சிவகலை. இந்நால் வரும் இன்பமுடன் வாழ்நாட்களைக் கழித்து வந்தனர். இறைவன் அருளால் ஞானகலாம்பிகையும், சிவநேசரும், மகன் கற்ற கல்வியைப் பெரிதும் பாராட்டிவந்தனர். திரு வெண்காட கற்றவர் நேசம், செல்வச் சேர்க்கை வர்த்தக வளர்ச்சி முதலியவற்ருல் சிறப்புற்ருர். கம்பீரமான தோற்ற முடைய இவர் இன்ப வெள்ளத்தில் மிதந்தார்.

என்னே மனித வாழ்க்கை! ஒரு நாள் திடீர் எனத் தகப்பனுர் சிவநேசர் காலம் எய்தினர். தாயார் கதறிஞள். ஊரார் எல்லாம் ஒக்கத் திரண்டனர். கதறிக் கதறி அழுத னர். பட்டினத்தார் பட்ட பாடு; விம்மி விம்மி அழுதார். ஊரும் சதமல்ல, உற்ருர் சதமல்ல எனக் கண் கலங்கினுர்; முறைப்படி கொள்ளியிட்டார், குட முடைத்தார். அடுத் தடுத்து உற்ருர், உறவினர், நேசர்கள் இறந்துபட்டொழிந் தனர். இறந்தவர்களை முறையே எண்ணி எண்ணி மனம் குமுறினுர்; கண்கள் நீரைச் சிந்தின.

ஒரு நாள் மேல் மாடியில் தனித்து இருக்கிருர், திரு வெண்காடர் தழுத்த குரலில் பாடுகிருர்.

"செல்வமோடு பிறந்தோர்; தேசொடு திகழ்ந்தோர்;
கல்வியில் சிறந்தோர்; கருந்திறல் மிகுந்தோர்;
கொடையில் பொலிந்தோர்; படையில் பயின்ருேர்;
குலத்தின் உயர்ந்தோர்; நலத்தினில் வந்தோர்;
எனையர் எம்குலத்தினில் இறந்தோர்;
அனையவர் பேரும் நின்றில".

கல்வி மிக்கவர், செல்வ மிக்கவர், அழகு நிறைந்தவர், வீர தீரர்கள், அவர்கள் போன இடத்தில் புல்லும் முளைத் தது. அவர்கள் பெயரும் மறைந்தது. பாடுகிறார், பாடிக் கொண்டே இருக்கிறார் பட்டினத்தார். இரவு வந்தது கூடத் தெரியவில்லை, அவருக்கு சாப்பிடும் வேளை வந்திடினும் மகன் வராததால், தாயார் மகனைத் தேடி வருகிறார்.

''திருவெண்காடா! எழுந்திரு அப்பா''

''ஏன் அம்மா?''

,'இன்னும் சாப்பிடவில்லையே, நீ''

''வேண்டாம் அம்மா, பசியில்லை''

''என்னப்பா, முகம் வாடியிருக்கிறது? பகலெல்லாம் பட்டினி நீ, என்ன உடல் நலமில்லையா? ஏன் கவலைப்படு கிறாய் அப்பா;''

திருவெண்காடர் சொல்லுகிறார்: ''அம்மா! எடாத தேகம் இல்லை; இந்த உடல் விழாத இடம் இல்லை; பெறாத தாயில்லை; உறாத உறவில்லை; உண்ணாத உறவில்லை; பண்ணாத தொழில் இல்லை. இந்தப் பீடை வாழ்க்கையில் கவலையாயில்லை? அதுதான் கடல் அலைபோல வந்து வந்து போகிறதே!''

தாய் மனம் வருந்தி சொல்லுகிறாள்: ''அப்பா! உன் தந்தை உயிர் போகிற நாள் வரை, சிவ பூஜை செய்தார்: வருந்தியிருந்தால், வருவது தடைப்படுமா. அப்பா நாம் ஒன்றும் தவறு செய்யவில்லையே! உரிய வேளையில் உண்ண வேண்டும், பரமனையும் பஜிக்க வேண்டும், அப்பா! எழுந் திரு, கொஞ்சப் பால் சாதமேனும் சாப்பிடு''.

"அம்மா! பரந்த மனமுடைய உங்களிடத்தில் தாயின் மேன்மையைக் காண்கிறேன்! இப்போது என் மனம் சரி யில்லை; நீ போய்ச்சாப்பிடம்மா!''

தாய் சென்றனள். அன்றிரவு தானும் உண்டிலள். பாயில் படுத்தாள்; உறக்கம் வரவில்லை; புரண்டு புரண்டு துயில் வர முயலலாயினள். குமுறுகிறது, பெற்ற வயிறு.

மனைவி சிவகலை நெருங்கினாள். சுவாமி! என்னிது? நாளெல்லாம் பட்டினியால் நீங்கள் வாடுவதைக் காண எங்கள் மனம் அல்லோல கல்லோலப்படுகிறது, நாதா!' தன் மணாளன் பதிலுக்குக்காத்திருக்கிறாள், சிவகலை. ஆனால் ஒரு பாட்டுதான் பதிலாக வருகிறது, தன் நாதனிட மிருந்து;

''உண்டதே உண்டும், உடுத்ததே உடுத்தும்
அடுத்தடுத்து உரைத்ததே உரைத்தும்
கண்டதே கண்டும், கேட்டதே கேட்டும்,
கழிந்தன கடவுளநாள் எல்லாம்
விண்ட தாமரைமேல், அன்னம் வீற்றிருக்கும்
விழவளு வீதிவெண் காடா
அண்டரே போற்ற அம்பலத்தாடும்
ஐயனே! உய்யுமாறு அருளே!''

சிவகலை திடுக்கிட்டாள். ஸ்வாமி! நாம் இல்லறவாசிகள். தெய்வத்தின் பெயரால் நம் விவகாரங்களையும் கவனிக்க வேண்டாமா?

மனைவியை ஏறெடுத்துப் பார்த்துச் சொல்கிறார், திருவெண்காடர்:

இறைவன் அருள். நெறிக்கு மாறான விவகாரங்கள் அடுத்தடுத்து இருக்கின்றனவே! என்ன உலகமோ, இது!

எனக்கு ஒன்றுமே பிடிக்கவில்லை; சிறிது ஓய்வு கொடு, சிவகலை!

அப்படியே செய்யுங்கள், நாதா! எனச் சிந்திய கண்ணீரோடு செல்கின்றாள், சிவகலை. பதிகங்கள் பாடிக்கொண்டே இலேசான நித்திரையில் அமர்ந்தார், திருவெண்காடர்.

அற்புதமான கனவு! பழுத்த அடியார் ஒருவர், கனவில் காட்சியளிக்கிறார், திருவெண்காடருக்கு. இவரை நோக்கிப் பெரியவர்:

"திருவெண்காடா! கவலை வேண்டா; நீ சிந்தனையில் ஆழ்ந்தது பொருத்தமே; எம்பெருமான் திருவருளை அடைவதைக் குறிக்கிறேன். ஏட்டில் அடங்காத கலை; ஐந்தெழுத்தே துணை; உவந்து, அதனை இடையறாது உருவேற்று. வாழ அதுவே வழி. இறைவன் அருள் அவசியம் அடைவாய்," எனக் கூறி மறைந்தார், சிவநேசச் செல்வர்.

கனவு கலைந்தது. பளிச்சென்று கண் திறந்தார். "புதையலான பஞ்சாட்சரத்தைப் பெற்றிருந்தும் அதை எண்ணவில்லை. மயக்கம் அகற்றிய உன் திருவருளுக்கு அஞ்சலி", என்று கதறினார். இச்சமயம் காலை 5 மணி. இந்த அலறலைக் கேட்டு, தாயும் மனைவியும் ஓடோடி வந்தனர். "திருவெண்காடா! அப்பா! என்ன இது? ஏன் இப்படி என்னென்னமோ சொல்கிறாயே?" எனப் பதறிக்கேட்கிறாள், தாயார். சிவகலை நடுங்கிக் கொண்டிருந்தாள். தாயும், மனைவியும் பதறுவதைக் கண்ட திருவெண்காடர் சொல்லலுற்றார்:

"அம்மா! ஐந்து எழுத்தை தொடர்ந்து உருவேற்றும் தீட்சைக் கனவில் பிறந்ததம்மா," என விவரங்களை விளக்கினார், திருவெண்காடார் தாயாருக்கு.

வெண்காடா! விமலனை வழிபடுவது விளையாட்டல்ல. பஞ்சாட்சரமே மந்திர ராஜம். அந்த ஜபம் சித்த சுத்தி தரும். மகனே கேள்:

*" செந்தழல் ஓம்பிய செம்மை வேதியர்க்கு,*
*அந்தியுள் மந்திரம் ஐந்தெழுத்துமே."*

என்பார் மேலோர். பஞ்சாட்சரத் தியானம் என்ருல், அருந் தவ முனிவரும் அஞ்சுவர். அநேக சித்த புருஷர்கள், வியாக்கியபாதர் முதலிய முனிவர்கள் இந்த வழிபாட்டை கிரமப்படி செய்து முக்திபெற்றனர். ஆனுல் அவர்களுக்குக் குடும்பக் கவலை இல்லை. நம் போன்றவர்க்கு அவ்வளவு ஈடு பாடு அதனில் இருந்தால், லௌகிகம் நடைபெருதே, அப்பா!

அம்மா! உயர்திணையில் இளம் பிள்ளைகளான மார்க் கண்டேயரும், துருவனும் வழிபட்ட கதைகளை எவரும் மறந்திலர்.

மகனே! வழிஒன்று உண்டு—நாளொன்றுக்குப் பனிரண் டாயிரம் பஞ்சாட்சர ஜபம்செய். மந்திரசித்தி உண்டாகும். ஆண்டவன் நனவிலும் கனவிலும் நல்லருள் புரிவன். அதன் பின் நீ இலிங்க வழிபாடு செய்யலாம்.

அப்படியே அம்மா! என்னைப் பெற்றெடுத்தீர்! பேருத வியான உபதேசமும் செய்தீர்!

என்று கூறிக்கொண்டே, வீழ்ந்து தாயை வணங்கிஞர் திருவெண்காடர்.

பஞ்சாட்சர மந்திரத்தைத் திருவெண்காடரும் மனைவி சிவகலையும், நாளொரு மேனியும் பொழுதொரு வண்ணமு மாக ஜெபித்து வந்தனர்.

உற்சாகமும் தைரியமும் மேலிட இறைவன் வழிபாட்டுடன். தன் வர்த்தகத்தைத் திருவெண்காடர் கவனித்துவந்தார்.



# பகுதி 3

## மருதவாணன் தோற்றம்

கண்ணும் கருத்துமுடனும் திருவெண்காடர் வர்த்தகத்தைச் செவ்வனே செய்து வந்தார். மற்ற நேரமெல்லாம் பஞ்சாட்சரத்தை ஜபித்துக்கொண்டிருந்தார். காவிரிப்பூம் பட்டினத்திலுள்ள சிறிய குடும்பம்; தாய் ஞான கலாம்பிகை, மகன் திருவெண்காடர், மனைவி சிவகலை, இம் மூவரைக்கொண்ட அருமையான, சிவநேசத்தில் முழுகிய, அன்பும் பண்பும் உடைத்தாயுள்ள குடும்பம்.

அதே சமயத்தில் தஞ்சை மாவட்டத்தில், கும்பகோணம் அருகில் திருவிடைமருதூரில், ஓர் சிவபக்தர், மகாலிங்கேசுவரரை வழிபட்டு வருகிறார். சிவசருமா என்ற பெயர் படைத்த பக்தராகிய இவர் மனைவி சுசீலையுடன் நாட்களைச் சிவத்தொண்டில் கழித்து வருகிறார்; தங்கள் செல்வத்தைச் சிவார்ச்சனைக்கும் மகேச பூஜைக்குமே செலவிட்டு, வறுமை பெருகி வருந்துகிறார்; செல்வம் குறைந்தாலும் அவர் ஊக்கம் குறையவில்லை. பஞ்சாட்சர தியானத்தில் அமர்ந்து கண்ணீரும் கம்பலையுமாய்க் காட்சியளித்தனர். ஒரு நாள்

அரிய தியானத்தில் மெய்மறந்து இருந்தவருக்கு ஒரு வாக்கு உண்டானது. கவனித்துச் செவிசாய்த்துக் கேட்டார்:

''சிவசருமா! இவ்வூரில் காருண்யாமிர்த தீர்த்தக்கரை அருகில் ஒரு வில்வ மரம் உண்டு. அதன் அடியில், இளம் சிறுவன் ஒருவன் அமர்ந்திருக்கிருன். அவனிடம் சென்று, அவனை அழைத்துவந்து, திருவெண்காடரிடம் கொடு. வேண்டிய உதவி விளையும்'', என்று அவர்க்கு ஓர் அறிவிப்பு பிறந்தது. திடுக்கிட்ட சிவசருமர் விழித்தார்; மனைவி சுசீலை யிடம் செய்தியைக் கூறினுர். ஆண்டவன் கட்டளையெனப் புனித தம்பதிகள் புறப்பட்டனர்.

இளஞ்சிறுவர் ஒருவர் குறித்த இடத்தில் இருந்தார். அவருடைய திருமுக தேஜஸ் அற்புதமாக இருந்தது. உற்றுநோக்கிய தம்பதிகட்கு உடல் சிலிர்த்தது.

அப்பா! நீ யார்! தெய்வம் போல் காட்சியளிக்கிருய்! எங்கிருப்பது நீ?

பதிலுரைக்கிருர் சிறுவர், ஹாஸ்யத்துடன்:

நான் எங்கும் இல்லை.

நீ யார் பிள்ளை?

பெற்றோர் முகமே அறிந்தது இல்லை, நான்

அப்பனே! உன் திருமுகமண்டலம் எங்களை பிரமிக்கச் செய்கிறது. காவிரிப்பூம்பட்டினத்தில், திருவெண்காடர் என்ற மகாபிரபு ஒருவர் உளர். அவரிடம் உன்னைச் சேர்த்துவிடுகிறேன். திருவுளச்சம்மதமோ?

ஓ! அப்படியே செய்யுங்கள். அவரிடம் நான் இருக்கிறேன். அவரே என்னைப் போஷித்துப் போற்றிவருவார்,

என்பது உங்கள் உத்தேசமானால், அவரிடம் கொண்டு செல்லுங்கள்.

காலை பத்துமணி. வர்த்தகத் தலத்தில் பட்டினத்தார் தன் அலுவலைத் திறம்படச் செய்துவருகிறார். அதே நோத்தில் சிவசருமத் தம்பதிகள் வந்தனர். பட்டினத்தார் அவர்களுடன் இருந்த பிள்ளையைப் பார்த்தார்.

நமஸ்காரம் ஸ்வாமி! உங்கள் வரவு நல்வரவு ஆகுக! அழகான இச்சிறுவன் உங்கள் பிள்ளையா?

சிறுவனைப் பார்த்துக் கேட்கிறார்: கண்ணே! உன் பெயர் என்ன?

மருதவாணன், என அழைக்கப் படுகிறேன்.

ஆகா? திருவிடைமருதூர்த் தெய்வப் பெயர் அல்லவா!

வேதியர், பட்டினத்தாரை நோக்கி, 'வேண்டுமானால், இச்சிறுவனை உங்களிடமே விட்டுவைக்கட்டுமா? என்றார்.

அப்படியே; சந்தோஷம். நம் மாளிகைக்குச் செல்லலாம், வாருங்கள்; என்று மூவரையும் அழைத்து போகிறார் திருவெண்காடர்.

மூவரும், இச்சிறுவனுடன் செல்கின்றனர், மாளிகை மார்க்கமாக.

மாளிகையில் நுழைந்தவுடனேயே, தன் தாயாரையும் மனைவியையும் கூப்பிடுகிறார், திருவெண்காடர்.

அம்மா! அம்மா! சிவகலை! இங்கே வாருங்கள் துரிதமாக. இச்சிறுவனை வேதியர் நம்மிடம் விட்டுவைப்பதாகக் கூறுகின்றனர்.

தம்பி! உன் பெற்றேர்கள் யார், என்ருள் சிவகலே. எனக்கு அம்மா, அப்பாவே இல்லே என்ருன் சிறியவன்.

தாயார் ஞானகலாம்பிகை, உருக்கத்துடன் பேச லுற்ருள்:

ஐயோபாவம்! இனி அப்படிச் சொல்லாதே, அப்பா! இனி உன் அம்மா இதோ! உன் அப்பா இதோ! என்று மகனேயும் மருகியையும் காட்டினுள், ஞானகலாம்பிகை.

ஆமாம்! அது உன் பாட்டி, என்ருர் பட்டினத்தார், தன் தாயைச் சுட்டிக்காட்டிக்கொண்டே.

சிவசருமாத் தம்பதிகளே, பட்டினத்தார் தனியாக அழைத்துப்போய், பொன்னும் பொருளும் ஏராளமாக அவர்களுக்கு வழங்கினுர். உயர்ந்த சேலேகளேயும் ஆடைகளேயும் உதவினர்.

விரும்பிய போதெல்லாம் வர வேண்டும், ஸ்வாமி! வேண்டுவன பெறவேண்டும், என்று அன்புடன் உபசரித்தார் பட்டினத்தார்.

ஆசி கூறி, மகிழ்வுடன் சிவசருமத் தம்பதிகள் சென்றனர். அசரீரியில் உணர்ந்த சிவசர்மா, கிடைத்த பொருளேக் கொண்டு, மீண்டும் சிவனடியார்களுக்கு உதவி புரிந்து கொண்டு, தன் வாழ்நாளேச் சிவசேவையிலேயே கழித்து வந்தார். பட்டினத்தாரும் சிவசருமா சேவையைக் கேட்டு மகிழ்ந்துவந்தார்.

———

# பகுதி 4

## மைந்தனைச் சிறையிலடைத்த தந்தை

பட்டினத்தார் பக்கலில் மருதவாணன் மகிழ்ந்திருந்தான். தாய் ஞானகலாம்பிகையும். மனைவி சிவகலையும் மருதவாணனிடம் கொஞ்சி மகிழ்ந்து விளையாடினர். உரிய காலத்தில் மருதவாணன் பள்ளிக்கேகினன். வர வர அவன் பயிற்சியின் மிகுதி கண்டு, பட்டினத்தார்க்கு மயிர்க் கூச்செறிந்தது. நாட்கள் பல சென்றன.

மாளிகையின் முன் புறம், வர்த்தகஸ்தலம். பருத்த முத்து ஒன்று விலைக்கு வந்தது பதினுயிரம். பொன் மதிப்பாகிறது என்ருர் பட்டினத்தார்.

பள்ளியிலிருந்து திரும்பிய மருதவாணன் கவனத்திற்கு இம்முத்துத் தென்பட்டது. உடனே முத்தைக் கையில் வாங்கினுன். பள்ளியில் நவரத்தின இலக்கணம் படித்து இருக்கிறேன், அப்பா. இது என்ன விலை?

பதினுயிரம் பொன்னும்.

அப்பா! இதைத் தொடவேண்டாம். ஆணி முத்து அல்ல; இதனுள் நீர் இருக்கிறது. இதை உடைத்துக் காட்டுகிறேன். மன்னிக்கவும், அப்பா.

மகன் மருதவாணன் முத்தை உடைத்தான். என்ன ஆச்சரியம்! குபுக்கென்று, அதனுள் இருந்த நீர் கொட்டியது.

இவ்வள்வு, நாளாகப் பழகி இருக்கிறேன், மருதவாணு! உன் படிப்பின் உயர்வு, உன் அறிவு எல்லாம் எனக்கு

மகிழ்ச்சியைக் கொடுக்கிறது. இவ்வயதில், இவ்வளவு அபாரமான அறிவுகொண்ட உன்னிடம் விமலன் விளையாடு கின்றான். மகனைக் கட்டி அணைத்து முத்தமிட்டார். அன்புக் கண்ணீர் சொரிந்தது, பட்டினத்தார் கண்களில். எழுந்து தன் மாளிகைக்கு மருதவாணனுடன் சென்று, தாயாரிடமும் மனைவியிடமும் நடந்த வரலாற்றைக் கூறி, அவர்களையும் மகிழ்வித்தார்.

மருதவாணனுக்கு இப்போது வயது பதினாறு.

இனிப் பள்ளிக்குச் செல்லவில்லை; உங்களுடனிருந்து வியாபாரத்தைக் கவனிக்கிறேன் அப்பா. என்றான் மகன் மருதவாணன். அவனுடைய இஷ்டப்படியே திருவெண் காடர் குமரனை வர்த்தகத்தில் அமர்த்தினார். வர வர வர்த் தகம் உயர்ந்து வருகிறது. மகனுடைய அறிவு மலர்ச்சியை, வாணிபத்தில் கண்டு மூவரும் மகிழ்ந்தனர். மருதவாணனது மதிநுட்பத்தை, ஊர் முழுவதும் பாராட்டுகிறது. வர்த்தகம் கம்பீரமாக நடைபெறுகிறது.

ஒரு நாள் மருதவாணன் தன் தந்தையிடம் சென்று பேசிக்கொண்டிருக்கிறான். அப்பா, நீங்கள் இனி ஓய்வு எடுத்துக்கொள்ளுங்கள். வாணிபத்தை நான் கவனித்துக் கொள்ளுகிறேன், என்றான் மருதவாணன்.

இதுவே நல்ல தருணம் எனப் பட்டினத்தார் மகிழ்ந் தார். பஞ்சாட்சர ஜபத்திற்கு உற்ற சமயம்; உறுதுணை கூட, என மகனைப் போற்றினார்.

மருதவாணன் வர்த்தக முதல்வனானான். பணப்பெருக்கம் வளர்ந்தது. இப்பெருக்கத்தைப் பார்க்கப் பார்க்க, பட் டினத்தாருக்கு வர்த்தகத் தலத்திலிருந்து பிரிய மனம் வரவேயில்லை. இத்தடுமாற்றத்தை மகனிடமும் கூறினார்.

மருதவாணனோடு தகப்பனின் மன ஊசலாட்டத்தைக் கண்டு சிந்தித்துச் சொல்லலுற்றான்.

அப்படியே, அப்பா! இங்கு, இனி நீங்களே வர்த்தகத்தை கவனியுங்கள். நான் கடலிலுள்ள பல தீவுகளில் சென்று, வாணிபத்தை வளர்க்கிறேன்.

இதற்கும் பட்டினத்தார் மனமகிழ்வுடன் ஒப்புக்கொண்டார்.

மருதவாணன் கடலில் பல தரம் சென்று திரும்பினான். திரை கடல் ஓடியும் திரவியம் தேடு, என்ற முதுமொழிப்படி, ஒவ்வொரு தரமும் ஏராளமான நவரத்தினங்களைக் கொண்டுவந்து குவித்தான்.

மீண்டும் ஒரு நாள் மைந்தன், தகப்பனிடம் அழுத்தம் திருத்தமாகக் கூறினான்: அப்பா! நான்தான் எல்லாவற்றையும் கவனித்துக்கொள்ளுகிறேன், என்றேனே? நீங்கள் பகவானை வழிபட்டு, சாந்தியாய் இருக்கலாமே! ஏன் இன்னும் இவ்விவகாரத்தில் மூழ்கி இருக்கிறீர்கள்? எனக் கேட்டான்.

மைந்தா! கண்மண் தெரியாமல் பணம் புரள்கிறது! ஓய்வு கொள்ள மனம் வரவில்லை. சற்று பொறுத்துக்கொள். இனிச் சிறிது காலத்தில் உன் விருப்பப்படியே விவகாரத்திலிருந்து விலகிக்கொள்கிறேன், மைந்தா! மன்னிக்கவும்.

மருதவாணன் பதில் சொல்லவில்லை. கப்பல்களில் மற்ற வர்த்தகர்களுடன் மீண்டும் மருதவாணன் பல தீவுகளுக்குச் சென்றான். ஒரு தீவில் மருதவாணனுடைய வர்த்தகம் பிரமாதமாக நடந்தது. ஏராளமாகக் கிடைத்த செல்வத்தைக்கொண்டு, அத்தீவில் பல கிணறுகள், குளங்கள், ஆலயங்கள். மடம், சத்திரங்கள், சாவடிகள் பல அமைத்து, ஏழைகட்கு அளவிலாத பொருளை வாரி வழங்கினான்.

மற்ற வர்த்தகர்கள் இதனைக் கண்டு வருந்தினர். பொருளை வளர்க்காமல், பொருளைச் செலவழிப்பது முறை யல்ல, என்று பலதரம் மருதவாணனிடம் உரைத்தனர். வெறுங்கையாக வீடு திரும்புவது, திருவெண்காடருக்குப் பிடிக்காது, என எச்சரித்தனர்.

யோசித்தான், மருதவாணன். ஒரு எண்ணம் அவன் மனத்தில் மலர்ந்தது. கப்பல் முழுவதும் எருமுட்டை, அவல் நிரப்பித் தன் சொந்த ஊருக்குத் திரும்பினான். மற்ற வர்த்தகர்கள் இவனுடைய திடீர் போக்கைக் கண்டு, மனம் கலங்கினர். இவனுடைய சித்தம் தெளிய மருந்துண் டோ, என்று கவலைப்பட்டனர். மருதவாணனுக்கு மதியதி கம்; வரவர வளர்ந்த அது பைத்தியத்தில் கொண்டு வந்திருக்கிறது. என அஞ்சினர்.

கப்பல்கள் திரும்பின. வணிகர்கள் பட்டினத்தாரை அணுகினர்: ''மருதவாணனுக்குச் சித்த சபலம் உண்டாகி இருக்கிறது! ஜாக்ரதையாகப் பாரும்'' என்று ரகசியமாகக் கூறிச் சென்றனர்.

திருவெண்காடர் திடுக்கிட்டார். மருதவாணனிடம் சாவதானமாகச் சென்று, நடந்த விஷயங்களைக் கேட்கவே மகன் மருதவாணன் குதூகலத்துடன் சொல்லலுற்றான். அப்பா, ஏராளமான லாபம்! எல்லாம் எருமுட்டை உருவில் கொணர்ந்தேன். அவல் மூட்டையும் அபரிமிதமுண்டு.

என்னடா! உன் சாகஸம்? பணத்தை விரயமாக்கி விட்டாயடா, மைந்தா?

இல்லையப்பா, என் அளவில் மாணிக்கத்திற்கும் எரு முட்டைக்கும் ஒரே மதிப்புதான். அவலிற்கு உள்ள மதிப்பு தான் பொன்னிற்கும்!

அடாது செய்தாயடா! செய்துவிட்டு எதிர்த்தா பேசுகிருய்? என்று கர்ஜித்தார்.

எட்டி மருதவாணனைப் பிடித்து, இழுத்து, மாளிகை யிலுள்ள ஓர் அறையில் அடைத்துக் கதவை மூடினுர்.

இன்று இரவு இவனுக்கு யாரும் உணவு கொடுக்கக் கூடாது, எனக் கண்டிப்பான உத்தரவு இட்டு, வர்த்தகத் தலத்திற்கு விரைந்து சென்ருர்.

தாயும் மனைவியும் ஓ என்று அலறினர். மருதவாணனைப் பெற்றெடுக்காவிடினும், வயிறு இருவருக்கும் குமுறு கின்றது. இருவரும் தத்தளித்தனர். இறைவனை நினைத்தனர். வீடு அல்லோலகல்லோலப்பட்டிருந்தது.





# பகுதி 5

## மருதவாணன் மறைந்தான்

மருதவாணனை அறையில் அடைத்த அன்றிரவு திரு வெண்காடருக்கு உறக்கம் வரவில்லை-இரவு மணி இரண்டு, அதன் பின் சற்று கண்ணயர்ந்தார்.

ஒரு கனவு. மருதவாணனைக் கண்டார். பெருத்த சிரிப் புடன் திருவெண்காடரை நோக்கி கூறுகிருன் மருதவாணன். பெரிதும் ஜபத்தைப் பெருக்கி அருட்சித்தியை நீ அடைய வேண்டுமென்றே, உன்னை ஊக்கினேன். அதை உடனுக் குடன் மறந்தாய்! புரள் செல்வத்தில் புரளுகிருய்! உடன்

தொடர்ந்து வருவது ஒன்றுமில்லை. மருதவாணன் உருவில் நான் வந்தேன். என்னைச் சிறையில் அடைத்தாய். இது சரியா? இது முறையா?

கனவில் கேட்ட கண்டிப்பை, உணர்ந்தார். பூ...பூ... பூ, என்று அலறினர், திருவெண்காடர். கண் விழித்தார். திடுக்கிட்டு எழுந்தார். மருதவாணு! மருதவாணு! என்று மறுபடியும் குழறினர்.

சப்தம் வரும் அறையை நோக்கி, சிவகலையும், தாயாரும் ஓடோடி வந்தனர். மருதவாணன் சிறையிடப்பட்ட அறையின் ஜன்னலைத் திறந்தனர். திடுக்கிட்டனர். மருதவாணன் இருந்த அறையில் ஜோதி அலை வீசுகிறது. நந்திதேவர், பிரம்மதேவர் முதல் யாவரும் வணங்கி வலம் வர, அடியார் பலருடன் சிவபெருமான் திருக்கோலமாக வீற்றிருக்கிறார். என்றும் காணுத காட்சி! கண்கள் கூசின. மூவருடைய கைகள் தலைமேல் ஏறின. பிரபோ! பிரபோ! என மூவரும் அலறினர்.

பொழுது விடிந்தது; மூவரும் விழித்தனர். ஜன்னல் வழியே நோக்கவே, மருதவாணன் தூங்கிக்கொண்டிருந்ததைப் பார்த்தனர். அறையின் கதவைத் திறந்து, மருதவாணனிடம் சென்று அவன் கால்களில் சாஷ்டாங்கமாக விழுந்து, பதற்றத்துடன் பணிந்தார், பட்டினத்தார். மருதவாணனே சிவபிரான் என்ற உணர்ச்சி மேலிடவே, பாட்டும் வருகின்றது:

''புன்மைப் பிழை புரிந்தேன்; அவை
பொறுத் தாண்டிடல் வேண்டும்;
வன்மைக் கொள நினையாது கொள்;
மருதப் பெருமா நீ!

நன்மைப் பொருளாய் வில்லிடு
    நாதப் பொருளாய்,
தன்மைப் பொருளாய் நின்றிடு தனியே!
    எனை முனியேல்!
பூவின் மணம்போலேஉயர் புனிதா!
    எனை முனியேல்!

மருதவாணன் முன்பு ஓ ..ஓ...ஓ...என்று கதறினர். தரும துரையே! என் ஒருவனை ஈடேற்ற என்ன பாடுபட்டாய்! அப்பனே! உமது கருணையைப் புரிந்து கொள்ளாது போனேன். லௌகிக வாழ்க்கையால் கண்ணிழந்தேன். அப்பா! பிழையைப் பொறுத்திடல் வேண்டும்! என்று விம்மி யழுத படி விழுந்தார்.

அன்பனே! இந்த ரகஸ்யத்தின் உண்மையை அநுபவித்தாய்! மெச்சினேன்! இனி வெளியில் போய்விடு! ஜாக்கிரதை! என்று மருதவாணன் உத்திரவிட்டான்.

அப்படியே செய்கிறேன், என்று அறையை விட்டு வெளிப்பட்டு, நேரே வர்த்தக ஸ்தலத்திற்கு விரைந்தார், திருவெண்காடர். அக மனம் மருதவாணன் பால்; புறமனம் வியாபாரத்தில். தன்னுடைய குமாஸ்தா சேந்தனரிடம் சில வார்த்தைகள் பேசிவிட்டு, மீண்டும் குழப்பத்துடன் மருதவாணன் இருந்த அறைக்குள் புகுந்தார். மருதவாணனைக் காணவில்லை; ஏங்கினர்; ஐயோ! அமல மூர்த்தியை முதலில் அறியாதிருந்தேன். விமலனைப் பிரிந்தேன்! சிவகலையிடம் ஓடினர், திருவெண்காடர் விஷயமறிய. சிவகலை சாவதானமாகச் சொல்லலுற்ருள்: ஸ்வாமி! மருத வாணன் தங்களிடம் தரும்படி தந்தப்பெட்டி ஒன்றைத் தந்தான். அவனை எங்கு அனுப்பினீர்கள்?

திருவெண்காடருக்கு ஆச்சரியம் மேலிட்டது. நடுக்கத்துடன் வழுவழுப்பான அப்பெட்டியை வாங்கினூர். திறந்தார். அதனுள் மடித்து சுருட்டிய ஒரு பட்டுத்துணி. என்ன அது என்று எடுத்தார். பல மடிப்பான அதைப்பிரித்தார். நைந்த நூல் நுழைத்த ஒரு காதறுந்த ஊசி. அதனுள் ஒரு துண்டு ஓலே ''காதற்ற ஊசியும் வாராது காண் நும் கடைவழிக்கே'' என்போல் ஓட்டைக் காது உன் செவிகள். நைந்த நூல் போன்ற சாஸ்திர விசாரணே ஓட்டைச் செவி வழி உறவாடி இருக்கிறது. இதனுல்தான் என்ரூே உருப்படியாக வேண்டிய நீ, உலக பந்தபாசத்தில் ஒட்டி இருந்திருக்கிருய்! தெரிகிறதா?

அரும்பாடுபட்டு சேர்ந்த செல்வத்தில், செல்லாத காசேனும் உன்னேத் தொடருமா? நீ இதுவரை செய்திருந்த சிவபுண்ணியந்தான் உனக்கு இறுதிவரை துணே. ஜாக்ரதை என்று அவைகள் மேன்மேலும் அறிவிக்கின்றன!

இம்மெய்யுரையால் திருவருளேப் பெற்ருர், பட்டினத்தார். உலக பந்த பாசத்தில் ஒட்டியிருந்தேன், சேர்த்த செல்வத்தில், செல்லாத காசேனும் என்னேத் தொடராது என உணர்ந்தார்; பாட்டும் வருகின்றது, திருவெண்காடர் வாயிலிருந்து:

''பட்டைக் கிழித்துப் பருவூசி தன்னேப் பரிந்தெடுத்து
முட்டச் சுருட்டி என் மொய்குழ லாள்கையின்
முன்கொடுத்துக்
கட்டி யிருந்த கனமாயக் காரிதன் காமமெல்லாம்
விட்டுப் பிரிய என்ரூே இங்ஙனே சிவன் மீண்டதுவே!

உண்மைதான்; பிரகிருதியின் பிராந்தி யெல்லாம் தீர்க்கத்தானே மருதவாணராகச் சிவபெருமான் வந்தார்!

பாட்டுகள் பரமசிவன் மேல் அடுக்கடுக்காகத் தொடர்ந்து வருகின்றன, திருவெண்காடர் வாயமுதத்தினல். மெய்மறந்து கண்ணீரும் கம்பலேயுமாய்ப் பாடுகிருர். தாயார் நெருங்கினுள். திருவெண்காடா! என்னப்பா, இது? ஏன் வருந்துகிருய்? மகளுக வந்த மருதவாணன் மலேமகள் மணுளனம்மா! ஆண்டவனே எனக்கு குருநாதனுன், தாயே! வெளியில் இரு, என்று அரிய உபதேசம் அருளினன். அம்மா! உனக்குக்கோடி கோடி, கும்பிடுகள், தாயே!

அப்பா! என் கடனே நிறைவேற்றிய பின் நீ எங்கும் செல்லலாம்! இயற்கையை எவரும் மறுக்க முடியாதே அப்பா! பொறுத்திரு! மகனே!

யான் குடியிருந்த வீடு தங்கள் திருவயிறு. குடியிருந்த வீட்டிற்குக் கொள்ளிவைப்பேன், அம்மா! அந்நாள் வரை இவ்வூரிலேயே நடமாடுவேன், தாயே! என்று அறிவித்தார்.

வீட்டை விட்டு வெளிப்பட்டார், பட்டினத்தடிகள். சிவகலே தொடர்ந்தாள். ''பெருமானே! தங்களே யன்றி எனக்குக் கதி வேறு ஏது?''

',நான் ஆடையின்றிச் செல்கின்றேன். கண்ட கண்ட இடம் சுற்றுவேன். உனக்கு அது முடியாது. இருந்த இடத்தில் இரு. ஐந்தெழுத்தைத் துணேகொள்!'' எனச் சிவகலேயின் துயரத்தை ஆற்ற முயன்ருர், பட்டினத்தடிகள். வருத்தம் மேலிட சிவகலே கண்ணீர் சொரிந்தார். மாமியாரும் மருகியும் வருந்தினர், இறைவனே வேண்டினர்.

தலேமை குமாஸ்தா ஓடோடி வந்தார். சேந்தனுர் பட்டினத்தடிகள் பாதங்களில் பணிந்தார். ''சேந்தரே! நம் செல்வமெல்லாவற்றையும் ஏழைகளுக்கு வாரி வழங்கிவிடும்.

யாம் உபதேசித்த பஞ்சாட்சரமே, தூய உமக்குத் துணை செய்யும்'' என்று சேர்ந்தனுரை வாழ்த்தினுர்.

ஆடையின்றி,பட்டினத்தடிகள் வீட்டை வீட்டு வெளிப் பட்டார். தாயாரும், மனேவியும் அழுத கண்ணீரும், சிந்திய மூக்குமாய் வாசலில் வந்தனர். வீதியில் கண்டவர் விம்மினர். திருவெண்காடர் துறவியாயினர் என அறிந்தனர். ''பெரிய அப்பா!'' ''சிற்றப்பா!'' ''அத்தான்!'' என்று அலறுங் குரல் எழுந்தது. வணிகரும் பிறரும் வாய்விட்டுக் கதறினர். ஐயோ! என்ன அருமையாக வளர்த்த மேனி, பொன்னுன மேனியில் புழுதி படுவதோ, எனப் புலம்பினர், உறவினர். புலம்பினவர்களுக்கெல்லாம் ஆறுதலுக்காக, ஒரு பாட் டைப்பாடினர், பட்டினத்தடிகள்:

'' எரியெனக் கென்னும்; புழுவோ
எனக்கெனும்; இந்த மண்ணும்
சரியெனக் கென்னும்; பருந்தோ
எனக்கெனும்; தான்புசிக்க
நரியெனக் கென்னும்; புன்னுயெனக்
கென்னுமிந் நாறுடலேப்
பிரியமு டன்வளர்த் தேனிதனுல்
என்ன பேறெனக்கே?

வரதராஜரை வழிபடவே, இவ்வுலகில் வந்தோம். கேட்பன எல்லாம் அவன் அருள் கீதம். அதைக் கேட்கும் வழியில் மனதைச் செலுத்துங்கள். உங்கட்கு இதுவே உபதேசம்.

விறு விறு என நடந்தார். நாட்கள் பல கழிந்தன. பசி பாதித்த போதெல்லாம் பட்டினத்தடிகள் இரு கையாலும் பிட்சை எடுத்தார். பசி தீர்ந்தபின், மண்டபத்தில்தான் இருப்பு. வேறு எதனிலும் பற்று இல்லே. அடியாரே உற

வினர்; அறியாமையே பகை; அன்பே செல்வம்; அருளே இடம்; தத்துவங்களே ஏவல் ஆட்கள்; சாந்தமே சார்பு; தவமே தொழில்; தரையே படுக்கை. இவ்வளவுதான் பட்டினத்தடிகள் செய்தி.

——

# பகுதி 6

## தன் வினை தன்னைச் சுடும்
## ஓட்டப்பம் வீட்டைச் சுடும்

பட்டினத்தடிகளார் தன் தாயாரிடம் வாக்குறுதி செய்தபடி, காவிரிப்பூம் பட்டினத்திலேயே, இங்குமங்கும் சென்று, பக்தகோஷ்டிகள் பின் வர, தன் காலத்தை இறைவன் வழிபாட்டில், உள்ளும் புறமும் ஆநந்தமடைந்து வந்தார். பசி பாதித்த போதெல்லாம், இரு கையாலும் பிட்சை எடுத்தார். பசி திர்ந்தபின், இருப்பு மடாலயங்களில், வேறு எந்தப் பற்றும் இல்லை. தரையே படுக்கை. பிரபுக்களாயிருக்கும் அவர் உறவிளர் மனம் கசிந்தனர். எங்கெங்கோ பிச்சை எடுக்கிறாரே மனம் புழுங்கினர். எவரும் பிட்சை யிடாதபடி தடுத்தனர். அதனால் பல நாள் பட்டினியுமிருந்தார் அடிகளார்.

அவருக்கு ஒரு சகோதரி; அவளும் ஓர் பிரபுவின் மனைவி. அண்ணன் யாசித்து உண்பது பெரிய மனவேதனையை அளித்தது. அண்ணனைத் திருப்ப, கணவரோடு அரும்பாடுபட்டாள். எல்லாம் விழலுக்கு இரைத்த நீர்! அன்று

இறந்துபோனாலும் நன்றாயிருக்குமே, என்று தங்கை தத்தளித்தாள். ஒரு நாள் தங்கை வீட்டிற்கே அடிகளார் பிட்சைக்கு வந்தார். தங்கை தன் பிட்சையையும் வாங்கிக் கொள்ளும்படி, கொடிய விஷம் தோய்த்த அப்பம் ஒன்றை அண்ணனுக்குப் பிட்சைகொடுத்தாள். இதை உண்டால், அண்ணன் இறந்துவிடுவார்; இனித்தன் மானம் போகாது. என்ற துர் எண்ணம் தூண்ட, இந்தத்தநகாத காரியத்தைக் கடைபிடித்தாள்.

என்னே உலகம்! அண்ணனைவிட மானம்தானா முக்கியம்? வந்த அப்பத்தை வாங்கினார்; ஊன்றி விஷத்தை உணர்ந்தார்; அறிந்தார், தங்கையினுடைய தீச்செயலை. "தன் வினை தன்னைச் சுடும்; ஒட்டப்பம் வீட்டைச் சுடும். என்று சொல்லிக்கொண்டே, அப்பத்தை தங்கை வீட்டின் இறப்பில் செருகிவிட்டு, இரண்டடிகள் சென்றார் அடிகளார். விஷத்தின் வேகத்தால், அண்ணன் துடித்து இறந்து போவார் என்று எண்ணி அண்ணன் இறந்து மடிவதைக் காணச் சகிக்காமல் கதவைச் சாத்தி உள் சென்றாள். அடிகளாருடைய வாக்கு மகிமையால், தங்கை மாளிகை குபீரென்று தீப்பற்றியது. வேகமாகப் பரவிய தீச்சுவாலை, சோறிட மறுத்த அக்கம் பக்கத்து வீடுகளைப் பாதித்தது; எல்லாம் சாம்பலாயின. தகுதியுடையார் சிலர் வீடுகள் தப்பின. ஞானிகள் வாக்கு மகிமை யுடையதன்றோ!

இது நிகழ்ந்த ஆறாவது மாதம். ஒரு நாள் சிலர் ஒரு பாடையைத் தூக்கிக் கொண்டு போவதைக் கண்ணுற்றார். இறந்தவர் தன் தாயாரே என்று அறிந்து, ருத்திர பூமியை அடைந்தார். பிரேதத்தைக் காஷ்டத்தின் மேலேற்றுவதை அறிந்தார். அடிகளார் வருவதைக் கண்டு அனைவரும் அஞ்சி அகன்றனர். காஷ்டத்தை மகனார் கலைத்தார். கனிவு

மிக்க தாய் மேனியைக் கண்டு குமுறி எழுந்த தன் கண்ணீரால் தாயைக் குளிப்பாட்டினர். பக்கத்துத் தோட்டத்தில் இருந்த பச்சை வாழை மரங்களை வெட்டி, அவைகளைச் சுமந்து கொண்டு வந்து, சிதையை அடுக்கினர். பரப்பிய அதன் மேல் தாயைப் படுக்க வைத்தார். பாடுகின்ருர், தாயின் பெருமையை. பாட்டுகள் சோகத்தில் அடுக்கடுக்காக வருகின்றன. தெய்வமே! பரிவோடு இந்த உடலை எடுத்துப் பால் கொடுத்த தாய் உடல், இதோ இதோ இருக்கிறது!

"அள்ளி யிடுவ(து) அரிசியோ? தாய் தலைமேல்
கொள்ளிதனை வைப்பேனே! கூசாமல்—மெள்ள
முகம்மேல் முகம்வைத்து முத்தாடி என்றன்
மகனே எனஅழைத்த வாய்க்கு!

கலுழ்ந்து பெருகியது கண்ணீர்; உதடுகள் துடித்தன.

"முன்னை யிட்டதீ மூப்பு ரத்திலே
பின்னை யிட்டதீ தென்னி லங்கையில்
அன்னை யிட்டதீ அடிவ யிற்றிலே
யானும் இட்டதீ மூள்க! மூள்கவே".

என்ருர்.

என்னே அற்புதம்! குபீரென்று பற்றியது காஷ்டம்.

ஆதி சங்கராசரியரும் இப்படியே பட்டினத்தடிகள் போலே தன் தாயாரைக் காஷ்டத்தில் கொண்டு, தன்னுடைய மகிமையால் தாயாரை எரித்தார். ஆதி சங்கரரையும், பட்டினத்தடிகளையும் நாம் நம் மனக் கண்ணுல் பார்த்து மனம் உருகுகின்ரேம்.

காஷ்டம் தீப்பற்றிக் கொழுந்து விட்டு எரிகிறது. அதைக் கண்டு, மனமுருக மறுபடியும் பாடுகிருர்:

"வேகுதே தீயதனில்! வெந்துபொடி சாம்பல்
ஆகுதே! பாவியேன் ஐயகோ—மாகக்
குருவி பறவாமல் கோதாட்டி என்னைக்
கருதி வளர்த்தெடுத்த கை:"

அம்மா! உன்னுடைய சரித்திரம் இதனுடன் பூர்த்தியா யிற்று! ஆ! ஹா!

மகாதேவா! இந்த ஆத்மாவிற்கு சாந்தி தா!

"வெந்தாளோ சோணகிரி வித்தகா! நின்பதத்தில்
வந்தாளோ என்னை மறந்தாளே—சந்ததமும்
உன்னையே நோக்கி உகந்துவரம் கிடந்(து) என்
தன்னையே பெற்றெடுத்த தாய்!"

என்று பாடி, தாயுடலை நீறுக்கினுர். அன்னையின் ஆத்மா, சிவனுர் திருவடி யடைக எனச் சிறப்பித்தார்.

தூரத்தில் இருந்து இந்த அற்புதத்தைப் பார்த்துக் கைவித்த அனைவரையும் பார்த்தார்.

ஐயா! ஐயா!

"வீற்றிருந்தாள் அன்னை வீதிதனி லிருந்தாள்
நேற்றிருந்தாள் இன்று வெந்துநீறுனுள்—பால்தெளிக்க,
எல்லீரும் வாருங்கள்! ஏதென் றிரங்காமல்
எல்லாம் சிவமயமே யாம்!"

என்றுர்.

தியான சமாதியில், அந்தியேஷ்டியை நிறைவேற்றினுர்.

---

# பகுதி 7

## தென்னுடைய சிவனே போற்றி

தாயாரிடம் அளித்த வாக்கை நிறைவேற்றிய பின், பட்டினத்தடிகள் மருதவாணன் கோயில் கொண்ட திருவிடைமருதூரை அடைந்தார். பல நாள் அங்கு பரமனை வழிபட்டு நின்றனர். அங்கு, மருதவாணன் தலத்தில் அவர் மனம் அமைதியை அடைந்தது.

ஒரு நாள் இரவு கனவில் மருதவாணன் நகர்க்காப்பாளனாகக் காட்சி யளித்தார். ''திருவெண்காடா! யாம் எழுந்தருளி யிருக்கும் தலங்கள் பலவற்றிற்கு வா!'' என்றார். அப்படியே, பிரபு! என்று அவ்வண்ணமே புறப்பட்டார். கும்பகோணம் முதலிய பல தலங்களை வழிபட்டுச் சேவித்தார், அங்கங்கு வீற்றிருக்கும் பரமனை அவர் அருளைப் புகழ்ந்து, புகழ்ந்து பாடினார். திருவாரூர்க்குச் சென்று, வீதி விடங்கன் முன் வீழ்ந்து வணங்கினார். திருவாரூரில் அடியவரிடத்தில் அளவிறந்த அன்பை உடையவனொருவன் பட்டினத்தடிகளைக் கண்டு, பயபக்தியோடு அவர்க்குப் பணி செய்தான். அங்கிருந்து மதுரைக்குச் சென்று, மீனாட்சி சுந்தரேசரை வணங்கினார். சொக்கநாதர் மேல் செய்யுளும் வருகின்றது:

"விடப்படு மோஇப் பிரபஞ்ச வாழ்க்கையை விட்டுமனம்
திடப்படு மோநின் அருளின்றி யேதின மேஅலையக்
கடப்படு மோஅற்பர் வாயிலில் சென்றுகண்
ணீர்ததும்பிப்
படப்படு மோசொக்க நாதாசவுந்தர பாண்டியனே."

பிறகு கொங்கு நாட்டிற்குச் சென்று, பேரையூர், அவிநாசி முதலிய தலங்களில் வணங்கினர். திருவெண்காட்டிற்கு வந்தார். முன்பு பணிசெய்த குமாஸ்தா சேந்தனருடைய மகனும் மனைவியும், அடிகளைக் கண்டு, ஓடோடி வந்து கதறினர். ஸ்வாமி! தங்கள் அடிபணிந்த குமாஸ்தா சேந்தனர், தங்கள் ஆக்ஞைப்படி, தங்கள் பொருளைச் சூறையிட்டார். அதிகாரம் தந்தவர் யார், என்று அவரைச் சிறையிலடைத்தார், அரசர், என்று பொருமியழுது, தாயும் மகனும் புலம்பினர். அப்படியா! என்று வீரிட்டு எழுந்தார், அடிகளார். வேதனையுடன் இறைவனைப் பாடுகிறார்:

"மத்தளை தயிருண் டானும், மலர்மிசை மன்னினனும்
நித்தலும் தேடிக் காண நிமலனே! அமலமூர்த்தி!
செய்த்தலைக் கயல்பாய் நாங்கூர்ச் சேந்தனை வேந்தனிட்ட
கைத்தளை நீக்கி, என்முன் காட்டுவெண் காட்டுளானே."

என்று பாடினர். அவ்வளவில், கருணையே வடிவான கணபதியெம்பெருமான் காட்சியாயினர். வித்தக சேந்தனரை விலங்ககற்றினர். அடிகள் எதிரில் நிறுத்தினர். நொடியளவில் இது நிகழ்ந்தது. மின்னல் போல் அத்தோற்றம் கனிவு காட்டிக்கரந்தது. சேந்தர் வியந்தார். வாய்த்த குருநாதரை வணங்கினர். சேந்தனரை அடிகள் வாழ்த்தி, அவரைச் சிதம்பரம் சென்று, நலம் சிறந்த மஹேஸ்வர பூஜையை அங்கு நடத்தும்படி சொன்னர். "அதன் மூலம் முத்தி பெறுவீர்" என்று அவரைக் குடும்பத்தோடு அனுப்பினர்.

அதன் பின் பட்டினத்தடிகள், அங்கிருந்து புறப்பட்டு, சிதம்பரம், சீகாழி முதலிய சிறந்த தலங்களைச் சேவித்துவிட்டுத் திருக்காரோணத்திற்கு வந்தார். சிவத்தைச் சேவித்தபின் அரிய தியானத்தில் அமர்ந்தார். நெடுநேரம்

பொறுத்துக் கண் விழித்தார். பின்பு காரோகணரைப் பாடிக்கொண்டே மீண்டும் செல்லலாயினர். தென்னுடைய சிவனே போற்றி என்று பட்டினத்தடிகள் சென்றவிடமெல்லாம் சிறப்படைந்தது. ஏராளமான பக்த சீடர்கள் அடியாரைத் தொடர்ந்தனர். அவர்களுக்கெல்லாம் நல்வாக்கும், நல்லுபதேசமும் செய்து புறப்பட்டார்.

பாடிக்கொண்டே பரவசமடைகிறார். உலக முழுவதும் தூய குரு மூர்த்தமாகத் தோன்றுகிறது. மற்றொரு சமயம் அகில உலகமும் இலிங்கங்களாகத் திகழ்கின்றது. எதிர்படும் யாவரும் சிவ சொரூபமாகத் தோன்றுகின்றனர். ''என்ன இன்பம்! பிரபோ! அனைத்தும் உன் ஆடலே தான் என்று அறிகிறேன்.''

*''வாழி திருவருள்! வாழி!''* 

என்று பாடுகிறார்:

*''வாவியெல்லாம் தீர்த்தம் மணலெல்லாம் வெண்ணீறு*
*காவனங்கள் எல்லாம் கணநாதர்—மூவுலகில்*
*ஈது சிவலோகம் என்றென்றே மெய்த் தவத்தோர்*
*ஓதும் திருஒற்றி யூர்.''*

என்று பாடிக்கொண்டு திருவொற்றியூரை அடைந்தார்.

திருஒற்றியூரா! தியாகேசா! அருள் புரிய வேண்டுகிறோம்.

முற்றும்.



SWAMY PATTINATHAR

by

SRI G. D. GOPALAKRISHNA NAIDU

T.T.D. Religious Publications Series No. 194

Price: Rs 1-00

*Printed and published by S. Lakshminarayana, I.A.S., Executive Officer and printed at T. T. D. Press, Tirupati. C. 5000—1987.*